REGD. No: TN MS (C) 244 — ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) — Phone 812818 — 4 பக்கம் விலை 35 காசு

**அரசாங்கம்**

அரசாங்கத்தைக் குறை சொல்லுவதையோ குற்றங்களை சுட்டிக்காட்டுவதையோ தவறு என்று சொல்லவில்லை. அதே நேரத்தில் அரசாங்கத்துடன் ஒத்துழைக்கவும் வேண்டும்.

-பண்டித நேரு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**காரியம்**

நாட்டில் நிலையான காரியங்கள் கட்சி வேறுபாடு இல்லாமல் நடக்கவேண்டும்.



-பேரறிஞர் அண்ணா



மலர்: 4 — சென்னை 29-3-1980 சனி — (★) ❋ ● ❋ (★) — வெளியீடு 30—3—1980 ஞாயிறு — இதழ் 141

கடலென மக்கள் திரண்டிருந்த திருச்சி ஒத்தக்கடைப் பொது கூட்டத்தில் புரட்சித் தலைவர் சங்கநாதம் செய்த காட்சி.

★ தொகுதிப் பங்கீடு எப்போது இறுதியாகும்?
★ தோழமைக் கட்சிகளுடன் பேச்சு எப்படி?
★ எந்தகட்சி எத்தனை தொகுதியில்போட்டியிடும்?

## செயற்குழு முடிந்தபின்

# நாவலர் பேட்டி

## மூன்றில் இரண்டு பங்குதொகுதியில் அண்ணா தி.மு.க. போட்டியிடலாம்

**சென்னை, மார்ச் 29- தமிழக சட்டசபைக்கான இடங்களில் மூன்றில் இரண்டு பங்கு (156 இடங்கள்) இடங்களில் கழகம் போட்டியிடும் என்று கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் அறிவித்தார்.**

கழகத் தலைமை நிலைய செயற்குழுக்கூட்ட முடிவுகளை டாக்டர் நாவலர் நிருபர்களிடம் விளக்கினார்.

டாக்டர் நாவலர் கூறியதாவது:

தலைமை நிலைய செயற்குழுக்கூட்டத்தில் செயற்குழு உறுப்பினர்கள் 118 பேர்களும் சிறப்பு அழைப்பாளர்களாக 36 பேர்களும் கலந்து கொண்டனர்.

செயற்குழுவில் மொத்தம் ஆறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

நிருபர்:- தொகுதி உடன்பாடு குறித்து தோழமைக் கட்சியினருடன் பேச்சு வார்த்தை நடத்த தேதி நிர்ணயிக்கப் பட்டுள்ளதா?

நாவலர்:- சில கட்சிகளுடன் "முதல் சுற்று"ப் பேச்சு வார்த்தை நடந்துள்ளது.

### ஏப்ரல் முதல் வாரத்தில் முடிவாகும்

அவர்கள் அவர்களுடைய விருப்பத்தைத் தெரிவித்து இருக்கிறார்கள்.

இருக்கிற சூழ்நிலையில் அவர்களுக்கு எந்த அளவு ஒதுக்க முடியும் என்பதை இன்னும் ஓர் இரு நாட்களில் கூடும் ஆட்சி மன்றக் குழு விவாதிக்கும். அதன் பிறகு இரண்டு மூன்று நாட்களில் அவர்களோடு பேச்சு வார்த்தை நடக்கும்.

நிருபர்: இந்தக்கணக்குப்படி தொகுதி பங்கீடு எப்போது இறுதியாக்கப் படும்?

நாவலர்: ஏப்ரல் முதல் வாரத்தில் முடிவுகள் ஏற்படலாம்.

நிருபர்:- எத்தனை கட்சிகள் இடங்களைக் கேட்டு இருக்கிறார்கள்?

நாவலர்:- 14 கட்சிகளும் கேட்டு இருக்கின்றன.

நிருபர்:- அர்ஸ் காங்கிரஸ் கேட்டுள்ளதா?

நாவலர்:- அவர்களும் கேட்டு இருக்கிறார்கள்.

நிருபர்: பெரும்பான்மை இடத்தை எங்களுக்குக் கொடுத்து விட்டு மிச்ச இடங்களை நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னீர்கள். அதன்படி இடங்களை எடுத்துக்கொள்வார்களா?

நாவலர்: அதனை அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. யார் யாருக்கு எவ்வளவு என்பதை எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து பேசி முடிவு எடுக்க இயலவில்லை. தனித்தனியாகப் பேசி யார் யாருக்கு எவ்வளவு இடங்கள் என்று சொல்லி இருக்கிறார்கள். ஆட்சி மன்றக்குழு இதுபற்றி முடிவு எடுக்கும்.

நிருபர்: மன்றக்குழு எப்போது கூடுகிறது?

நாவலர்:- இன்னும் இரண்டொரு நாளில் கூடும்.

நிருபர்: தோழமைக்கட்சியினர் கேட்கும் இடங்களை ஒதுக்குவீர்களா?

நாவலர்: முதலில் எண்ணிக்கைபற்றி முடிவுசெய்ய வேண்டும். பிறகுதான் தொகுதிபற்றிய பிரச்சினை வரும். முதலில் எந்தக் கட்சிக்கு எவ்வளவு இடங்கள் என்பதுபற்றி முடிவு செய்யப்படும்.

நிருபர்: இந்தவேலை எல்லாம் ஏப்ரல் முதல்வாரத்தில் முடிவடைந்துவிடும் என்று எதிர்பார்க்கிறீர்களா?

நாவலர்: அப்படி முடிய வேண்டும் என்று நினைக்கிறோம். இன்னமும் தேர்தல் தேதி அறிவிக்கப்படவில்லை. தேர்தல் தேதி அறிவிப்புவந்துவிட்டால் இந்த வேலைகள் வேகமாக நடக்கும்.

நிருபர்: இடங்கள் ஒதுக்கீடு பற்றி நாடாளுமன்ற தேர்தலின்போது கடைப்பிடித்த முறை பின்பற்றப்படுமா?

நாவலர்:- அப்போது கட்சிகள் குறைவு; இடங்களும் குறைவு. இப்போது அப்படி இல்லை.

### 156 இடங்களில் கழகம் போட்டி

நிருபர்:-மூன்றில் இரண்டுபங்கு இடங்களில் போட்டியிடுவோம் என்று முன்பு சொன்னீர்கள். அதன்படிமூன்றில்இரண்டு பங்குஇடங்களில் போட்டியிடுவீர்களா?

நாவலர்:- அந்த எண்ணத்தில் தான் இருக்கிறோம்.

நிருபர்:- அமைச்சர்களாக இருந்த இரண்டு பெண்கள்கட்சியைவிட்டுச் சென்று விட்டார்களே?

நாவலர்:- போட்டியிட பல பெண்கள் இருக்கிறார்கள்.

### தனித்தனி தேர்தல் அறிக்கை

நிருபர்:- தேர்தல் அறிக்கை கூட்டாக இருக்குமா?

நாவலர்:- தனித்தனியாகவே இருக்கும்.

நிருபர்:- மக்களை ஈர்க்க குறைந்தபட்ச திட்ட அடிப்படையில் தேர்தல் அறிக்கை வெளியிடலாம் என்று இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளும் கருத்து தெரிவித்துள்ளதே?

நாவலர்: ஒத்த கருத்துக்கள் இருக்கின்றன. ஜனநாயகத்தை காக்கவும் மக்கள் நலனில் அக்கறை காட்டவும் ஒத்த கருத்துக்கள் இருக்கின்றன. ஆனாலும் தேர்தல் அறிக்கை தனியாகவே இருக்கும்.

## அரசு வாரிய உறுப்பினர் பொறுப்பு: ஏ. சி. தேவர் ராஜினாமா

சென்னை, மார்ச் 29- தமிழக அரசின் காதி போர்டு, திட்டக் கமிஷன் வீட்டு வசதி வாரியம் ஆகியவற்றில் உறுப்பினராக இருந்த கழக வழக்கறிஞர் ஏ. செல்லையா(ஏ. சி. தேவர்) அந்தப் பொறுப்பிலிருந்து இன்று ராஜினாமா செய்தார்.

## தேர்தலில் போட்டியிட 2 ஆயிரம் கழகத்தவர் மனு

சென்னை, மார்ச் 29- தமிழக சட்டசபைக்கான 234 தொகுதிகளிலும் போட்டியிட கழகத் தோழர்கள் இரண்டாயிரம் பேர் மனு கொடுத்திருப்பதாககழகப்பொதுச் செயலாளர்டாக்டர் நாவலர்அறிவித்தார்.

கழகத்தின் சார்பில்கழக ஆய்வுக் குழுவினர் மாவட்டந்தோறும் சென்று வந்தது தெரிந்ததே.

அந்த ஆய்வுக் குழுவினரிடம் கழகத் தோழர்கள் பெரும் அளவில் மனு கொடுத்து போட்டியிட விருப்பம் தெரிவித்துள்ளனர்.

234 தொகுதிகளில் போட்டியிட ஏறத்தாழ 2 ஆயிரம் கழகத் தோழர்கள் மனு கொடுத்திருக்கிறார்கள். கழகத்தோழர்கள் மத்தியில் ஏற்பட்டு இருக்கும் ஆர்வ உணர்வினையே இது காட்டுவதாக இருக்கிறது.

ஆய்வுக் குழுவில் கொடுத்துள்ள அறிக்கைகளையும், விண்ணப்பங்களையும் ஆட்சிமன்றக்குழு இன்னும் ஓரிரு நாளில் கூடி ஆராய்ந்து முடிவு எடுக்கும் என்று டாக்டர் நாவலர் நிருபர்களிடம் தெரிவித்தார்.

**கழக செயற்குழு தீர்மானங்கள்:**

## புரட்சித்தலைவருக்கு அதிகாரம்

தமிழக சட்டப் பேரவைக்கு அண்மையில்தேர்தல் நடைபெறயிருப்பதால் அவ்வப்போது ஏற்படுகின்ற சூழ்நிலைக்கேற்ப அவசர முடிவுகள் எடுப்பது தேவையாகிறது. பொதுச் செயலாளர் பல்வேறு பொறுப்புகளை நிறைவேற்ற வேண்டியுள்ளது. எனவே பொதுச் செயலாளருக்குத் துணை செய்யும் வகையில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் அடிப்படை அமைப்பு- கொள்கை- குறிக்கோள்- தனித் தன்மை-பொதுக்குழுத் தீர்மானங்கள் ஆகியவற்றுக்கு ஏற்ப, அரசியல் சம்பந்தமாகவும் கழகம் சம்பந்தமாகவும் அவ்வப்போது எழும் பிரச்சினைகள் பற்றி முடிவுகள் எடுப்பதற்கும், அறிக்கைகள் வெளிபிடுவதற்குமான அதிகாரத்தை, இச்செயற்குழு கழக நிறுவனர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு அளிக்கிறது. அத்தகைய முடிவுகளை பொதுச் செயலாளருடன் கலந்துபேசி, பின்னர் செயற்குழுவின் ஒப்புதலுக்கு வைக்க வேண்டும்.

-பொதுச் செயலாளர்

## "உண்ணாவிரதப் போராட்டம்"

பொதுமக்களின் முக்கியமான கோரிக்கைகளான விவசாயிகளின் கடன் சுமைகளை நீக்குவது, விலைவாசிகளின் ஏற்றத்தைத் தடுத்துக் குறைப்பது, அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக அரசு நிறைவேற்றிய சட்டங்களையும், அளித்த சலுகைகளையும் நடைமுறைப் படுத்துவது போன்றவைகளை வலியுறுத்துவதற்காக நகர் தோறும் உண்ணா விரதப் போராட்டம் மேற்கொள்ளும்திட்டத்தை எப்பொழுது எவ்வாறு நடத்துவது என்பதை ஜனநாயக முற்போக்குக் கூட்டணிக் கட்சிகளைக் கலந்துகொண்டு ஆவன செய்யும் அதிகாரத்தை இச்செயற்குழு பொதுச் செயலாளருக்கு அளிக்கிறது.

முன்மொழிபவர் : பாலகுருசாமி
வழிமொழிபவர் : துரை. கோவிந்தராசன்

(இதர தீர்மானங்கள் 3-ம்பக்கம்.)

மாண்புமிகு விவசாய அமைச்சர்

## ஆர். வி. சாமிநாதன்

அறிவித்தபடி

## விவசாயிகள் கடன்பற்றி இறுதி முடிவு செய்ய இன்னும் ஒரே ஒரு நாள் தான் உள்ளது



## நெடுமாறன் தேர்தல் நிதி

சென்னை, மார்ச் 29- ஏப்ரல்1ம்தேதிமுதல் 15ம் தேதி முடியதமிழ்நாடெங்கும் எல்லா மாவட்டங்களிலும்தேர்தல்நிதி திரட்டும் இயக்கத்தினை தமிழ்நாடு காங்கிரஸ்(கா)நடத்துகிறது. வீடுவீடாகவும், கடைகடையாகவும் சென்றுகாமராஜ் திருஉருவம் பொறிக்கப்பட்ட கூப்பன்களை விற்று தேர்தல் நிதி திரட்டப்படும்.

ஏப்ரல் 2ம்தேதி மதுரையில் தமிழ்நாடு காங்கிரஸ் (கா) தலைவர் பி. நெடுமாறன் வீதி வீதியாகச் சென்று தேர்தல் நிதி திரட்டுகிறார்.

ஏப்ரல் 4ம்தேதி திருச்சியில் தமிழ்நாடு காங்கிரஸ் (கா) துணைத் தலைவர் தஞ்சை ராமமூர்த்தி தேர்தல் நிதி திரட்டுகிறார்.

இராமநாதபுரத்தின் பொதுச்செயலாளர் கே. பாரமலை, தஞ்சையில் பொதுச்செயலாளர் சி. ஜம்பு மற்றும் பல்வேறு தலைவர்கள் ஒவ்வொரு மாவட்டத்திலும் தேர்தல் நிதி திரட்டும் இயக்கத்தில் ஈடுபடுகிறார்கள்.

## குமரி அனந்தன்

ராயபுரம் பகுதியில் வீதி வீதியாக உண்டியல் ஏந்தி இன்று தேர்தல் நிதி வசூலித்தார் குமரி அனந்தன், ஒரு மணி நேரத்தில் 1,400ரூபாய்வசூல்ஆனது.

குமரி அனந்தனுடன் தஞ்சை மன்னர் மன்னன் ஜெகன், டாக்டர் சண்முகம், வண்ணை கலைத்தாசன் சீனிவாசன், ராஜன் நாஞ்சில் ராஜேந்திரன் ராமையா மற்றும் காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தொண்டர்கள் நிதி வசூலில் கலந்து கொண்டனர்.

மாலையில் தண்டையார் பேட்டையில் குமரி அனந்தன் உண்டியல் ஏந்தி தேர்தல் நிதி வசூல் செய்கிறார்.

## இளங்கோவை எதிர்த்து நாராயணராவ்

சென்னை, மார்ச் 29- சட்டமன்றத் தேர்தலில் சிவ. இளங்கோ எந்தத் தொகுதியில் போட்டியிட்டாலும் அவரை எதிர்த்து போட்டியிடுவேன் என்று நாராயணராவ் அறிவித்துள்ளார்.

என். ஜி. ஓ. சங்கத்தேர்தலில் சிவ. இளங்கோவை எதிர்த்துப் போட்டியிட்டவர் நாராயணராவ்.




# ★ காலத்தின் தீர்ப்பு ★

பிரகாசம்

ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார்

குமாரசாமி ராஜா

மூதறிஞர் ராஜாஜி

பெருந்தலைவர் காமராஜர்

பக்தவத்சலம்

அறிஞர் அண்ணா

கலைஞர் கருணாநிதி

புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர்.

இந்த ஒன்பது பேரும் தமிழ் நாட்டின் முதல்வராகப் பொறுப்பேற்றிருந்தவர்கள். இவர்களில் 'விசாரணைக் கமிஷன்' அமைக்கப்பட்டு – குற்றச்சாட்டுக்கள் உண்மைதான் என முடிவுரைக்கப்படுகின்ற பேற்றைப் பெற்ற ஒரே முதல்வர்-டாக்டர் கலைஞர் மட்டுமேதான்.

"பல்விதமாயின ஊழல்களின் மணம் பாரெங்கும் வீசும் தமிழ்நாடு"

எனும் வகையில்-தொட்டதிலெல்லாம்-லஞ்ச ஊழ்-ஊழலும் துலங்கும் வண்ணம் ஆட்சி நடத்திய வித்தகர் கலைஞர் ஒருவரேதான். அவர்தான் அடுத்த முதல்வராக வரவேண்டுமாம்.

ஏனெனில் அவருக்கு மட்டும் தான் ஆளத் தெரியுமாம். நுங்கம்பாக்கம் கூட்டத்தில் பேராசிரியர் அன்பழகனார் இந்த அரும் பெரும் கருத்தை எடுத்தோதியிருக்கிறார். 'ஆளுகின்ற' அந்த சூட்சுமம் அன்பழகனார்க்குக் கூட வராதாம். பாவம்! அவ்வளவு தாழ்வு மனப்பான்மை!

கலைஞர் மட்டுமே கற்று வந்த அரிய கலையாம் அது.

"உங்கள் புரட்சித் தலைவருக்கு என்ன தெரியும்?" என்று சட்டமன்றத்தில் திமுக நண்பர் ஒருவர் பேசிய போது-சகோதரர் ஆலடி அருணா எழுந்து சொன்னார், "ஆமாம், எங்கள் தலைவர்-உங்கள் தலைவரைப் போல-ஆக்ஸ்போர்டிலோ கேம்பிரிட்ஜிலோ படித்ததில்லை" என்று அன்பழகனார்க்கும் தெரியாத அந்த ஆட்சி வித்தை கலைஞர்க்கு மட்டுமே தெரியும் போலும்.

பேராசிரியர் மேலும் சொல்கிறார். "கருணாநிதியை முதலமைச்சராக எப்படி ஒப்புக் கொள்ளலாம் என்று சில நண்பர்கள் கேட்கிறார்கள்.

**நாமென்ன அவர்களைப்பார்த்தா கலைஞர் முதலமைச்சராக வர நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டுமென்று கேட்டோம? தேர்தலில் வெற்றிபெற்று வருகிறவர்கள் இதைப்பற்றி முடிவு எடுக்கப் போகிறார்கள்."**

இது இந்திரா காங்கிரஸ்காரர்களுக்குப் - பேராசிரியர் - காட்டுகிற பிரச்சினை தீர்க்கும் மார்க்கம்

தேர்தலில் வெற்றி பெற்று வருகிறவர்கள் இதைப் பற்றி முடிவு செய்வார்களாம். அப்படியானால் தேர்தலில் தி.மு.க. அதிக இடங்களில் வெற்றி பெற்று வந்தால்-அவர்கள் 'கலைஞரை' சொல்வார்கள். அதிக இடங்களில் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற்று வந்தால்-அவர்கள் இந்திரா காங்கிரசைச் சேர்ந்தவரையல்லவா தேர்ந்தெடுப்பார்கள்? ஆகவேதான் பேராசிரியர் மறைமுகமாக அறிவுறுத்துகிறார்.

**இந்திரா காங்கிரசின் ஆதரவோடு - தி.மு.க. அதிக இடங்களைப் பெற வேண்டும். ஆனால்-இந்திரா காங்கிரஸ் அதிக இடங்களைப் பெற்று விடக் கூடாது.**

இதுதான் பேராசிரியர் எடுத்துவைக்கும் கருத்துரையின் உள்நோக்கம். ஏற்கனவே இதைப் புரிந்து கொண்ட இந்திரா காங்கிரஸ்காரர்கள் விழிப்போடுதான் இருக்கிறார்கள். என்னே- இவர்களது நட்பின் முதிர்ச்சி! என்னே இலட்சிய உறவின் இலட்சணம்!

"ஏழாண்டுக்காலம் திறமையாக ஆட்சி நடத்தினாராம் கலைஞர்" பேராசிரியர் சொல்கிறார். அந்த ஏழாண்டுக்காலம், தமிழ் மக்களுக்குத் தெரியாதா? அது என்ன கி. மு. முதல் நூற்றாண்டிலிருந்த 'ஏழாண்டுக் காலமா? மக்களுக்கு அந்த ஏழாண்டுகள்-மறந்தாபோயிற்று? திறமையாக ஆட்சி நடத்தினாராம்-என்ன திறமை?

**இந்தியாவில் வறுமைமிகுந்த மாநிலம் தமிழ்நாடுதான் என்ற நிலையை உருவாக்கிய திறமையா? நீதிபதிகளையே ஆளுங் கட்சிக்காரர்கள் மிரட்டுகிறார்கள் - என்று பெருந்தலைவர் காமராஜரே குற்றம் சுமத்தினாரே அந்தத் திறமையா?**

இந்திரா காங்கிரஸ்காரர்களது தயக்கத்துக்கும் - தடுமாற்றத்துக்குமே அது தானே காரணம்?

**குற்றம் சுமத்திய நாமே - அவரைக் கொலுமண்டபத்தில் அமரச்சொன்னால்-உலகம் ஓங்காரக் குரலெடுத்துச் சிரிக்குமே என்றுதானே-அவர்கள் கைபிசைந்து நிற்கிறார்கள்!**

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக அணியிலுள்ள அனைத்துக் கட்சிகளும் சுருதி பேதமில்லாமல் ஒரே குரலில் 'எங்கள் அணி வெற்றிபெற்றால் எம். ஜி. ஆர். தான் முதல்வர்' என்கிறார்கள்.

ஆனால் அங்கே - அப்படிச் சொல்ல வழியில்லை. அதனால் தான் அன்பழகனார் புரட்சித் தலைவர் மேல் சீறுகிறார். "சட்ட மன்றத்தை மதியாதவர்" என்று புரட்சித்தலைவர் மீது குற்றம் சுமத்துகிறார். அடுத்த வாக்கியத்தில் அவரே அதைமறுக்கிறார். "நிறையப் பேசி நேரத்தை வீணாக்கினார்" என்கிறார். சட்டமன்றத்தில் பேசிய ஒவ்வொரு உறுப்பினர் கூறிய கருத்துக்கும் புரட்சித்தலைவர் பதில் சொல்ல விரும்பியதால்தான் அதிகம் பேசினார். சட்டமன்றத்தை-அதன் உறுப்பினர்களை மதித்ததால்தான் பேசுவதற்கு அதிக நேரம் எடுத்துக் கொண்டார்.

அவருக்குப் பேசத் தெரியவில்லைஎன்றொரு குற்றச்சாட்டு. அதிகம் பேசுகிறார் என்றொரு குற்றச்சாட்டு. அவர்களுடைய வாக்கிலே உண்மையில்லை என்பதை இந்த முரண்பாடுகளே உணர்த்துகின்றன.

கிராமப்புறங்களுக்குக் குடிநீர் வழங்கியது முதல் அரிசிவிலை உயராமல் பார்த்துக் கொண்டதுவரை தமிழகமக்களின் அன்றாட வாழ்வில் துயரம் குடிபுகாமல் காத்தவர் புரட்சித் தலைவர்.

மார்க்சிஸ்ட் இயக்கத்தலைவர் தோழர் பி.ஆர், பேராசிரியர் பா.ரா, அண்ணன் எம்.கே, நெடுமாறன், குமரி அனந்தன்- திருவாரூர் தங்கராசு- பார்வர்ட்பிளாக்கின் கந்தசாமி, பெரியசாமி, இந்தத் தலைவர்களெல்லாம் - இன்னும் இஸ்லாமிய- கிறிஸ்தவ- தாழ்த்தப்பட்ட, பிற்பட்ட சமூகத் தலைவர்களெல்லாம்-ஒரு சேர-எதிர்கால முதல்வர் என ஏற்றுக்கொண்டிருப்பது புரட்சித் தலைவரைத்தான். புரட்சித் தலைவரை முதல்வராக-நாட்டு மக்கள் முழுமையாக ஏற்றுக் கொண்டு-வாக்களிக்கின்ற சம்பிரதாயக் கடமையாகத்தான் தேர்தலை எதிர்கொள்ளக் காத்திருக்கிறார்கள்,

கலைஞரை அடுத்த முதல்வராக்குவோம்-என தி.மு.க.வின் நிலைய வித்துவான் - உடனிருந்து உடுக்கையடிக்கும் பேராசிரியர் அன்பழகனார் சொல்லலாம். ஆனால்-இதயமுள்ள தமிழக மக்கள் ஏற்கமாட்டார்கள். ஏன்? இந்திரா காங்கிரசே கூட ஏற்காது.

தமிழ் மொழியும்-தமிழ்த் திருநாடும் உய்வுபெற்று- உயர்வுபெற்று - உலக அரங்கிலே புகழ் பெற்றுத் திகழவேண்டுமானால்-

**புரட்சித் தலைவர் முதல்வராக அமர்ந்தே ஆகவேண்டும்.**

**இது காலத்தின் தீர்ப்பு!**

**வரலாற்றுக் கட்டாயம்!**

பட்டதாரி உதவித் தொகை திட்டம்

# எமக்கு ஒத்த கொள்கை அல்ல என கூறத்தயாரா? டில்லிக்கு நாவலர் கேள்வி

சென்னை மார்ச் 29-வேலையற்ற பட்டதாரிகளுக்கு ரூ. 50 உதவித் தொகை அளிக்கும் புரட்சித் தலைவர் அறிவித்த திட்டத்தை எங்களுக்கு ஒத்த கொள்கை அல்ல இது. ஆகவே அமல்படுத்தமாட்டோம் என்று மத்திய அரசு சொல்லத் தயாரா என்று டாக்டர் நாவலர் வினா எழுப்பினார்.

இந்த திட்டத்தை அமல் படுத்த முடியும் என்று கருதியதால்தான் கழக அரசு அறிவித்தது என்றும் நாவலர் கூறினார். நேற்று நிருபர்களுக்கு அளித்த இது தொடர்பான பேட்டி விவரம் வருமாறு:

நிருபர்:- புரட்சித் தலைவர் ஆட்சியில் அறிவிக்கப்பட்ட திட்டங்கள் பலவற்றை அமல்படுத்த முடியாது என்று மத்திய நிதி அமைச்சர் ஆர். வி. கூறியிருக்கிறாரே?

நாவலர்: அவைகளை நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லிவருகிறோம். மக்களுக்காக அறிவிக்கப்பட்ட அந்த திட்டங்களை இப்போது நிறைவேற்ற இயலாது என்று சொல்வது முறையல்ல.

மக்களால் தேர்ந்துஎடுக்கப்படும் புதிய அரசு வந்த பிறகு தான் இவைகளைப் பற்றி முடிவு செய்ய வேண்டும் என்று சொல்வது முறையல்ல.

மக்களால் தேர்ந்து எடுக்கப்பட்ட ஒரு அரசு அறிவித்த திட்டம்தான் அவைகள். அவைகளை நடைமுறைப் படுத்த வேண்டியது இவர்கள் பொறுப்பு ஆகும் அதுதான் முறை.

கொள்கை சம்பந்தப்பட்ட முடிவுகளை எடுக்க வேண்டியநிலை ஏற்பட்டால் வருகிற புதிய அரசு முடிவு எடுக்கும் என்று சொல்லலாம்.

## அமல் படுத்துவதே முறை

ஆனால்இதில் கொள்கை ஏற்கனவே அறிவிக்கப் பட்டுவிட்டது. முடிவுகள் எடுக்கப்பட்டு விட்டது. சட்மன்ற ஒப்புதல் பெறப் பட்டு உள்ளது. அப்படிப் பட்டவைகளை அமல்படுத்துவதுதான் முறையாகும்.

கழக ஆட்சியில் போடப்பட்ட ஆணைகள், நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் அறிவித்த சலுகைகள் நடைமுறைப் படுத்தப் படவேண்டும்.

நிருபர்: வேலையற்ற பட்டதாரிகளுக்கு ரூ. 50 தரும் திட்டத்திற்கு தொடர்பான ஆணைகள் பிறப்பிக்கவில்லை. இது உள்நோக்கம் கொண்டது. தேர்தலுக்காக என்றும் சொல்லுகிறார்களே ?

நாவலர்:- உள்நோக்கம் எதுவும் இல்லை, வெளிநோக்கம் தான். மக்கள் நலன் தான் கொள்கைப்படி முடிவு எடுக்கப்பட்ட பிரச்சினை. இதை நிறைவேற்ற வேண்டும் என்று பகிரங்கமாக சொல்கிறோம்.

இந்தக் கொள்கை எங்களுக்கு ஏற்ற கொள்கை அல்ல. ஆகவே நிறைவேற்ற மாட்டோம் என்று பகிரங்கமாகச் சொல்லத் தயாரா?

நிறைவேற்ற இயலாத திட்டம் அல்ல இது.

கேரளத்தில் விவசாயிகளுக்கு பென்ஷன் திட்டத்தை அறிவித்து இருக்கிறார்களே?

அதனை அங்கேநிறைவேற்றும்போது இதை இங்கு நிறைவேற்றமுடியாதா?

இந்ததிட்டத்தை நிறைவேற்றமுடியும் என்று தான் கழகஆட்சியில் அறிவித்தது.

## டெல்லியில் காமராஜ் பேரவை

புதுடெல்லி, மார்ச் 29- இந்திய காமராஜ் பேரவை நிறுவனத்தின் டெல்லி பிரிவுத்தலைவராக திரிபுரா மாநில முன்னாள் முதல்வர் எஸ். எல், சிங்தாதாஜி நியமிக்கப்பட்டார், பேரவையின் கூட்டம் டெல்லியில் நடந்தது ஏராளமான பிரமுகர்கள் கலந்து கொண்டனர். 19 உறுப்பினர் கொண்ட அட்ஹாக் கமிட்டி அமைக்கப்பட்டது. அமைப்புக் கூட்டத்துக்கு நாடாளுமன்ற மக்களவை உறுப்பினர் நீலலோகிதாஸ் தலைமை வகித்தார். இந்த நிறுவனம் சமூக-கலாச்சாரப் பணிகளில் ஈடுபடும் என்று பேரவைத் தலைவர் நீல லோகிதாஸ் தெரிவித்தார்.

அய்யம்பேட்டை

## அஜீஸ் தாயகம் திரும்பினர்

சென்னை, மார்ச் 29. தஞ்சைமாவட்ட நாடாளுமன்றச் செயலாளர் அய்யம்பேட்டை அஜீஸ், சிங்கப்பூரில் நான்கு வார காலம் சுற்றுப்பயணம் செய்து விட்டு தாயகம் திரும்பினர்,

சென்னை வந்தவுடன் புரட்சித்தலைவரை சந்தித்து அஜீஸ் வாழ்த்துப் பெற்றார்.

பொதுக் கூட்டங்களுக்கும் கழக நிகழ்ச்சிகளுக்கும் அய்யமபேட்டை அஜீஸ், அய்யம்பேட்டை, தஞ்சை மாவட்டம் என்ற முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

முகவரி:
கார்க்கி
10, சைவமுத்தைய முதலி முதல் தெரு
ராயப்பேட்டை
சென்னை-14

தமிழ் நாட்டில் நடந்த பயங்கரம்!

# பஸ்ஸை மடக்கி துணிகரகொள்ளை: ஒருவர் கொலை

கோவில்பட்டி, மார்ச், 29- ஓடும் பஸ்ஸை வழி மறித்து அதில் இருந்த ஒருவரிடம துணிகர கொள்ளை நடந்தது. பின்னர் இது சம்பந்தமாக ஒருவர் படுகொலை செய்யப்பட்டார். இதைத் தொடர்ந்து கோவில்பட்டி வட்டாரத்தில் பெரும் பீதியும்-பதட்டமும் நிலவுகிறது.

இந்த சம்பவம் பற்றி கூறப்படுவதாவது:

கோவில்பட்டியை அடுத்த கழுகாசலபுரம் கிராமத்தில் உள்ள மளிகைக்கடையில் வேலை பார்க்கும் ஒருவர் 3 ஆயிரத்து 800 ரூபாய் பணத்துடன்சாமான்கள் வாங்க கோவில்பட்டிக்கு பஸ்ஸில் சென்று கொண்டிருந்தார்.

பணத்துடன் அவர் பஸ்ஸில் போய்க்கொண்டிருப்பதை அறிந்த சிலர் அந்த பஸ்சை வழிமறித்து நிறுத்தினர்கள்.

அரிவாளைக்காட்டி மற்ற பயணிகளை அவர்கள் பயமுறுத்தினர், கடையில் வேலை பார்க்கும் நபரை வெட்டி காயப் படுத்திவிட்டு அவர் வைத்திருந்த 3 ஆயிரத்து 800 ரூபாயையும் பறித்துக் கொண்டு ஓடிவிட்டனர்.

இந்த துணிகரகொள்ளை நடத்தியவர்கள் சின்னத்துரை தேவர் என்பவரும் மற்றொருவரும் என்று கடையின் சொந்தக்காரர் ஆறுமுகம்பிள்ளை என்பவருக்கு தகவல் கிடைத்ததாம்,

இதனால் ஆத்திரமடைந்த ஒருகோஷ்டி திரண்டு போய் சின்னத்துரை தேவர் வீட்டைத் தாக்கி நாசப்படுத்தியதாகக் கூறப்படுகிறது.

சின்னத் துரைத்தேவர் வெட்டிகொலைசெய்யப்பட்டார். இந்தகொள்ளை-கொலையைத் தொடர்ந்து அந்தப்பகுதியில் பெரும் பரபரப்பு ஏற்பட்டுள்ளது.

தகவல் கிடைத்ததும் மாவட்ட போலீஸ் அதிகாரி மாவட்ட கலெக்டர் ரெவின்யூ டிவிஷனல் அதிகாரி ஆகியோர் அங்கு சென்று முகாமிட்டு விசாரணை நடத்தினர்கள்.

நடந்த சம்பவங்கள் குறித்து போலீசார் வழக்குப்பதிவு செய்து புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## ராஜபாளையம் கழகக் கூட்டம்

ராஜபாளையத்தில் நாளை (30ந் தேதி) மாலை மலையடிப்பட்டித் தெருவில் அண்ணா தி.மு.க பொதுக் கூட்டம் நடக்கிறது.

ஆர். எஸ். அழகர்சாமி தலைமையில் சென்னை எரியீட்டி ராஜகோபால் முன்னாள் எம்.எல்.ஏ. தனுஷ்கோடி, முகவூர்ரத்தினம், இரா. அருணகிரி, த. ராமச்சந்திரன், பன்னீர்செல்வம், வை.சுந்தரம், ஆகியோர் பேசுவர்.

## அறங்காவலர் குழு தலைவராக வேலாயுதம் தேர்வு

சென்னை, மார்ச் 29 திருவான்மியூர் மருந்தீசுவரர்கோவில் அறங்காவலர் குழுத்தலைவராக ஆர். வேலாயுதம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இந்துமத அறநிலையத் துறை5வதுவட்ட ஆய்வாளர் மனோன்மணி அம்மையார் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. அறங்காவலர்களாக ப.நடராசன் சொ. ஜோதி, இரா. மூர்த்தி ஆகியோர்தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.



## ஓடுகிறார்... ஓடுகிறார்...

எம்.ஜி.ஆர். பேசுவதற்கெல்லாம் பதில் சொல்லிக்கொண்டிருப்பது என்பது இயலாத காரியம். ஏனென்றால் அவர் என்ன பேசுகிறார் என்றே புரியவில்லை.

-கருணாநிதி பேட்டி

★

எப்படிப் பதில் சொல்ல கருணாநிதியால்இயலும்! இவர் பதில் கூற இயலுகின்ற கேள்விகளையா புரட்சித் தலைவர் கேட்கிறார்?

தாலி இங்கே, தங்கம் எங்கே என்று பாராளுமன்றத் தேர்தலின்போது கேட்டீர்களே இப்போது அதையே நாடு கேட்கிறது. உங்களைப் பார்த்து. கருணாநிதியாரே உமது பதில் என்ன?

நானூறு ரூபாய்க்குத் தங்கம் தருவோம் என்று நாடாளுமன்றத் தேர்தலின்போது நாப்பறை கொட்டினீர்களே; கருணாநிதியாரே எப்போது தரப் போகிறீர்கள்?

விலைவாசி உயர்ந்துவிட்டது என்று அப்போது அலறினீர்களே, கருணாநிதியாரே இப்போதைய விலைவாசி நிலவரம் என்ன?

கழக அரசில் கிலோ 2 ரூபாய் 75 காசுக்கு சர்க்கரை விற்றபோது கூப்பாடு போட்ட கருணாநிதியே இப்போது ஆறு ரூபாய்க்கும், ஏழு ரூபாய்க்கும் சர்க்கரை விற்கிறதே என்ன பதில் சொல்கிறீர்கள்?

## -: புலிகேசி :-

அவசரநிலை காலத்தில் ஆயிரம் தொண்டர்கள் சிறையில் சித்ரவதைப்பட்டு ரத்தம் சிந்தினர்கள். அதையெல்லாம் மறந்து அதற்குக் காரணமானவர்களுடன் கைகோர்த்துக் கொண்டிருக்கிறீர்களே... கருணாநிதியாரே...ரத்தம் சிந்திய கட்சித் தொண்டர்களுக்கு இதுதான் மரியாதையா?

உம்மை நம்பியிருந்து உமக்காகச் சிறை சென்று உயிர்விட்டவர்கள் சிட்டிபாபுவும், பாலகிருஷ்ணனும். அவர்கள் மரணத்துக்குக் காரணமானவர்களிடமே மண்டியிட்டு மடிப்பிச்சை கேட்கும்கருணாநிதியாரே... சிட்டிபாபுவின் மனைவியும், பாலகிருஷ்ணனின் மனைவியும் அறுத்த தாலிக்கும், இழந்த குங்குமத்துக்கும் என்ன பதில் சொல்கிறீர்கள்?

தமிழக முதல்வரைத் தமிழர்களே தீர்மானிக்கும் சரித்திரத் திருப்பத்தை 1967-ல் அறிஞர் அண்ணா ஏற்படுத்தினர். இன்றுவரை நீடித்த அந்த மரபை இப்போது டெல்லிக்கு மீண்டும் கொடுத்துவிட்டீரே கருணாநிதியாரே... இதுதான் அண்ணா வழி நடக்கும் லட்சணமா?

'இந்தித் திணிப்பை எதிர்த்தே தீருவோம்' என்று முழங்கிய கருணாநிதியாரே... 'இந்தியை மெள்ள மெள்ள தமிழர்கள் ஏற்றுக் கொள்வார்கள்' என்று சேத்தியிடம் உத்தரவாதம் கொடுத்து தமிழர்களைக் காட்டிக் கொடுத்துவிட்டீரே...இது நியாயமா?

'மாநில சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி' என்று கர்ஜித்த கருணாநிதியாரே..'மத்தியில் சுயாட்சி மாநிலத்தில் கூட்டாட்சி' என்று தலைகீழ் பாடம் படித்துக் கொண்டிருக்கிறீர்களே, ஏன்?

இரு மொழித் திட்டம் உங்கள் கட்சியின் கொள்கை. மும்மொழித் திட்டம் இந்திரா காங்கிரசின் கொள்கை. இந்திரா காங்கிரசுடன் கொண்டுள்ள உமது உறவை லட்சிய உறவு என்று கூறும் கருணாநிதியாரே...இதில் யாருடைய லட்சியத்தை யார் ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள்?

மாநில சட்டசபைகளைக் கலைக்கும் அதிகாரம் மத்திய அரசுக்கு இருக்கக்கூடாது. அதற்கு அதிகாரம் தரும் அரசியல்அமைப்புச் சட்டத்தின் 356வதுபிரிவை ரத்து செய்ய வேண்டும் என்று ராஜ்ய சபையில் பேசுகிறீர்கள்; ஆனால் சட்ட சபையைக் கலைத்தது தவறு என்று தீர்மானம் கொண்டு வந்தால் அந்தத் தீர்மானத்துக்கு எதிராக ஓட்டுப் போடுகிறீர்கள்...கருணாநிதியாரே இது என்ன இரட்டை வேடம்?

-இப்படிக் கேள்விகளைப் புரட்சித் தலைவர் கேட்டால் கருணாநிதியால் எப்படிப் பதில் சொல்ல இயலும்?

அதனால்தான் அவருக்கு புரட்சித்தலைவர் பேசுவது புரியவே மாட்டேன் என்கிறது.

கிடுக்கிப்பிடிக் கேள்விகளைப் புரட்சித்தலைவர் அடுக்குகிறார்-விட்டால் போதும் என்று கருணாநிதி ஓடுகிறார்.

பாவம்!

# எந்த ரூபத்தில் இந்தி திணிப்பு நடந்தாலும்

# எதிர்த்தே தீருவோம்

## கழகச் செயற்குழு தீர்மானம்

**சென்னை, மார்ச் 29- பண்டித நேருவின் வாக்குறுதியை மீறி தமிழகத்தில் இந்தித்திணிப்பு நடவடிக்கைகளை மத்திய அரசு மேற்கொண்டிருப்பதை கழகச் செயற்குழு கண்டித்தது. இந்தித்திணிப்பு தொடர்ந்தால் அறவழிப் போராட்டம் நடத்தப்படும் என்றும் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.**

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் செயற்குழுக் கூட்டம் நேற்று சென்னையில் நடந்தது தெரிந்ததே. அந்தக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மான விவரம் வருமாறு :

மொழிப்பிரச்சினைப் பற்றி பண்டித நேரு அளித்த வாக்குறுதிக்கு மாறாக, இந்தி பேசாத மாநிலங்களில் இந்தியைப் பரப்புவதற்கான எல்லா நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படும் என்று இந்திய தலைமை அமைச்சர் திருமதி. இந்திரா காந்தி அவர்கள் கூறியிருப்பதும், இந்தி பேசாத மாநிலங்களில் உள்ள பள்ளிகளில் இந்தியைப் பயிற்றுவிப்பதற்கு இந்திய அரசின் செலவில், இந்தி ஆசிரியர்கள் அனுப்பிவைக்கப்படுவார்கள் என்று மத்திய அரசின் சார்பாக சொல்லியிருப்பதும், இந்தி ஆதிக்கத்தைத் திணிக்கும் முயற்சியாகும் என்று இச்செயற்குழு கருதி கண்டிப்பதோடு அப்படிப்பட்ட முயற்சிகளைக் கைவிடாவிட்டால், அவற்றை திராவிடப் பெருங்குடி மக்கள் அமரர் அண்ணா அவர்கள் வகுத்துத்தந்த அறவழியில் கடுமையாக எதிர்த்துப் போராடி, எவ்விதத் தியாகத்திற்கும் தயாராக உள்ளனர் என்பதை இச்செயற்குழு தெரிவித்துக்கொள்கிறது.

முன்மொழிபவர் : ஆலடி அருணா
வழிமொழிபவர் : டி. கே. சீனிவாசன்
உ. பில்லப்பன்

## புரட்சித் தலைவர் மீது தாக்குதல் முயற்சி

26-2-80 அன்று, சென்னையில சாலை ஓரத்தில் ஒதுங்கி நின்ற புரட்சித்தலைவரின் காரையும், புரட்சித் தலைவர் அவர்களையும் தி. மு. கழக ஊர்வலத்தினர் தாக்க முயன்ற வன்முறைச் செயலையும்,

24-3-80 அன்று புரட்சித்தலைவர் அவர்கள் சென்ற பாண்டியன் விரைவு வண்டியை, மாத்தூருக்கு அருகில் தி. மு. கழகத்தைச் சேர்ந்த வன்முறையாளர்கள் தடுத்து நிறுத்தி, பெட்டியைக் கற்களால் அடித்துப் புரட்சித்தலைவர் அவர்களைத் தாக்க முயன்ற வன்முறைச் செயலையும் இச்செயற்குழு வன்மையாகக் கண்டிப்பதோடு, இன்றைய ஆட்சியில் சட்டம்-ஒழுங்கு நிலை அடியோடு கெட்டுவிட்டது என்பதையும் சுட்டிக்காட்டி, வன்முறையாளர்மீது சட்டப்படி தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு தமிழக ஆளுநரை இச்செயற்குழு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது.

முன்மொழிபவர் : கே. ஏ. கிருஷ்ணசாமி
வழிமொழியவர் : எஸ். ஆர். இராதா

## "காவலரின் கோரிக்கைகளுக்கு ஆதரவு"

1. புரட்சித்தலைவர் அவர்களோடு தமிழ் நாடு காவல்துறை சார்நிலை அலுவலர் சங்கத்தின் பொதுச் செயலாளர் ஏ. சி. ஜே. பிரிட்டோவும், அவர் சங்கத்தைச் சார்ந்த மற்றவர்களும் நடத்திய பேச்சு வார்த்தைகளை இச்செயற்குழு ஆதரிக்கிறது.

2. தமிழ்நாடு காவல்துறை சார்நிலை அலுவலர் சங்கம் கேட்டுக் கொண்டபடி, அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்தவுடன் ஆய்வாளா முதல் காவலர் வரை உள்ளவர் அடங்கிய சங்கத்தை அங்கீகரிக்க வேண்டும் என்ற கோரிக்கையையும், பிற கோரிக்கைகளையும் ஏற்றுக் கொண்டதை இச்செயற்குழு வரவேற்கிறது.

முன்மொழிபவர் : ஆர். சௌந்தரராசன்
வழிமொழிபவர் : இரா. மோகனரங்கம்

## "வன்முறைக்கு கண்டனம்"

மார்ச் திங்கள் 2-ஆம்நாள் சென்னையில், சனநா

யக முற்போக்குக் கூட்டணிக் கட்சிகளின் சார்பாக நடைபெற்ற பேரணி ஊர்வலத்தின் போது, ஊர்வலத்தினர் மீது, தி. மு. கழகத்தினர் முற்கூட்டியே திட்டமிட்டுச் சதிசெய்து, கற்களையும், கட்டைகளையும் சோடாப்புட்டிகளையும், செருப்புக்களையும் வீசி, வன்முறை வெறியாட்டம் ஆடியதையும், ஊர்வலத்தினர்க்குப் பாதுகாப்புதர வேண்டிய அரசு, அத்துமீறிய அடக்குமுறையை ஏவிவிட்டு ஒரு குற்றமும் செய்யாத ஆயிரக்கணக்கான தொண்டர்களையும், பொதுமக்களையும் படுகாயப்படுத்தியதையும், நிரபராதிகள் பலர்மீதுபொய்வழக்குகள் பலவற்றையும் தொடுத்திருப்பதையும் இச்செயற்குழு வன்மையாகக் கண்டிப்பதுடன், உயர்நீதிமன்ற நீதிபதியைக் கொண்டு, நீதிவிசாரணை நடத்த வேண்டுமென்றும் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது.

முன்மொழிபவர்: செ. அரங்கநாயகம் மதுரை மேயர் எஸ். முத்து
வழிமொழிபவர்: தமிழ்மகன்உசேன் பி,எச். பாண்டியன்.

இவ்வாறு கழகச் செயற்குழுவில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

துரை, தமுக்கம மைதானத்தில் நடந்த பிரமமாண்டமான பொதுக் கூட்டத்தில் புரட்சித் தலைவர் கலந்துகொண்டபோது மன்றத் தோழர்கள் தொடர் ஓட்டம் மூலம் "அண்ணா ஜோதி" கொண்டுவந்து கொடுத்தனர். தொடர் ஓட்டத்தில் கலந்து கொண்ட ஒரு தோழர் முன்னுள் போலீஸ்காரர். போலீஸ் பணியிலிருந்து விலகி கழகத்தில் சேர்ந்தவர் அவர்.

## புரட்சித் தலைவரை கொல்லநடந்தமுயற்சி: திட்டமிட்ட செயல்

### மார்க்சிஸ்ட் கண்டனம்

**சென்னை, மார்ச் 29 புரட்சித் தலைவரை கொல்ல நடந்த முயற்சி திட்டமிட்ட தாக்குதலாகும். இது பற்றி தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கேட்டுக் கொண்டது.**

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில செயற்குழு வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:

24-3-80 இரவு சென்னையில் இருந்து மதுரைக்கு பாண்டியன் எக்ஸ்பிரஸில் பிரயாணம் செய்துகொண்டிருந்த எம், ஜி.ஆர். மீது மாத்தூர் ரயில்வே நிலையத்தில வைத்து பலாத்கார தாக்குதல் நடத்த செய்யப்பட்ட முயற்சியை செயற்குழு வன்மையாக கண்டிருக்கிறது.

அந்த ரயில் நிலையத்தில் பாண்டியன் எக்ஸ்பிரஸ் நிற்க வேண்டிய அவசியமில்லாத போதும் முன்கூட்டிய திட்டமிட்டு கயிறுமூலம் கைகாட்டியை கட்டி ரயிலை நிறுத்தி எம். ஜி. ஆர். அவர்கள் பிரயாணம்செய்த ரயில் பெட்டியை 50 பேர் கொண்ட ஒரு ரவுடிக்கும்பல் தாக்கி உள்ளது.

எம். ஜி. ஆர். ஒழிக, என்று கோஷங்கள் அவர்கள் எழுப்பியுள்ளனர்.

### திட்டமிட்ட செயலே

எனவே. இது திட்டமிட்டே செய்யப்பட்ட ஒரு பலாத்கார தாக்குதல் என்பது மிகவும்தெளிவானது. இதில் சம்பந்தபட்டவாகள் மீது தக்கநடவடிக்கை போலீஸ் உடனடியாக மேற்கொள்ள வேண்டும் என்று மாநில செயற்குழு தமிழக அரசை வற்புறுத்தியது.

இந்திரா காங்கிரஸ் கட்சியால் நடத்தபடும்மத்திய அரசால் சர்வாதிகார ரீதியில் எம்.ஜி.ஆர். அவர்களுடைய அரசு கலைக்கப்பட்டது. இப்பொழுதுஎம்ஜிஆர் அவர்கள் மக்களை சந்திக்க செல்லும் பொழுது இத்தகைய பலாத்கார தாக்குதல் நடைபெறுகிறது. ஜனநாயகத்திற்கு ஏற்படும இந்த பெரும் அபாயத்தை தமிழ் மக்கள் வன்மையாக கண்டிக்கவேண்டும்.

### தலைவர்கட்கு பாதுகாப்பு

இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு எதிராக தேர்தலில் போட்டியிடவுள்ள கட்சிகளின் தலைவாகளுக்கு முழு பாதுகாப்பு அளிக்க வேண்டிய கடமை. இன்றைய ஆட்சியை நடத்தும் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கும், அதன் கூட்டாளிகளுக்கும் உண்டு என்பதை அவர்களுக்குத் தமிழ்மக்கள் தெளிவாக உணர்த்த வேண்டுமென்று செயற்குழு கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அந்த அறிக்கையில்கூறியுள்ளது.

## ரூ. 20 ஆயிரம் திருட்டுநகைகள் மீட்பு

சென்னை. மார்ச் 29- தியாகராயநகர் போலீசார் ஜான் என்பவரை நகை திருட்டு சம்பந்தமாக கைது செய்து விசாரணை செய்தனர்.

அவர்கொடுத்ததகவலின் பேரில் ரூ. 20 ஆயிரம் மதிப்புள்ள தங்கநகைகள் கைப்பற்றப்பட்டன. இவை வில்லிவாக்கம் பகுதியில் திருடப்பட்டவை என்று தெரிகிறது.

பாருங்கல்லைப் போட்டு

## கழக தோழரை கொல்ல முயற்சி

சென்னை, மார்ச் 29- கழக சார்புமன்றத்தலைவர் ஒருவரை பாருங்கல் வீசி கொல்ல முயற்சி நடந்தது. இதனல் படுகாயம் அடைந்த அவர் உயிருக்கு ஆபத்தான நிலையில் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட்டுள்ளார்.

இது பற்றி கூறப்படுவதாவது:-

கோட்டூர் புரம் மேற்கு கனல் பாங்க் ரோடில் வசித்து வருபவர் எம். கோபால் (வயது 36). இவர் அப்பகுதி அமரர் அண்ணா அரும்பணி மன்றத்தின் தலைவராவார். இவருக்கும் இப்பகுதியில் உள்ள சில சாராய வியாபாரிகளுக்கும் முன் விரோதம் இருந்து வந்ததாம்,

சம்பவத்தன்று இவர் தன் மனைவி சின்னப்பொண்ணு ஒரு வயது குழந்தை ரைராஜ் ஆகியோருடன் வீட்டில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்.

அப்போது திடீர் என்று ஒரு கும்பல் தடி, செங்கல் சைக்கிள் செயினுடன் இவர் வீட்டில் புகுந்து இவரைத் தாக்கினார்கள். அந்த கும்பலில் வந்த ஒருவர் கோபாலவீட்டின அருகில்உள்ளஒரு பாருங்கல்லை எடுத்துவந்துஅவர் தலையை பார்த்துபோட்டார். இதனால் கோபாலின் இடது கைமுறிந்தது, இடது கண்ணில் பலத்த காயம் ஏற்பட்டது.

இவர் அந்த இடத்திலேயே அலறித் துடித்தார.

இவர் அலறல் சத்தத்தைக் கேட்டுஅருகில்இருந்தவாகள் ஓடிவந்தார்கள். அவர்களைப் பார்த்தவுடன் வன்முறை கும்பல் ஓடிவிட்டது. இது சம்பந்தமாக கோபால்அடையாறு போலீஸ் நிலையத்தில் புகார் கொடுத்துள்ளார்,

ஆனல் போலீஸ் இதுவரை யாரையும் கைது செய்யவில்லை.

## குவியுது காண் தேர்தல் நிதி!

### தேர்தல் நிதி அளித்தோர் பட்டியல்

| | ரூ. பை. |
|---|---|
| எஸ். பாப்பையன் பட்டுக்கோட்டை | 101.00 |
| எஸ். இராகவானந்தம் சென்னை | 10-00 |
| இரா. மங்களம்மாள் சென்னை | 10-00 |
| கே. நிலவழகன் சென்னை | 10-00 |

### புவனகிரி தேர்தல் நிதி:

| | |
|---|---|
| மருதை மங்களூர | 20.00 |
| அருட்செல்வன் | 20-00 |
| இராமகிருஷ்ணன் முடிகண்ட நல்லூர் | 5-00 |
| அன்பழகன் காவலங்குடி | 10-00 |
| இராசமாணிக்கம் கீழ் புளியங்குடி | 10-00 |
| டி.எஸ்.கலியபெருமாள் தலைக்குளம் | 5-00 |
| செல்ல. வீரபத்ரன் | 20-00 |
| தண்டபாணி தாண்டவன்குப்பம் | 2-00 |
| கே. எஸ். ராஜா காட்டுமன்னார்கோவில் | 2 00 |
| என். சேகரன் திட்டக்குடி | 5-00 |
| தன. கோவிந்தராசன் | 10-00 |
| கிருஷ்ணமூர்த்தி குறிஞ்சிப்பாடி | 5 00 |
| கலியபெருமாள் தம்பிக்கி நல்லான் பட்டினம் | 5-00 |
| கோவிந்தசாமி ஸ்ரீ நெடுஞ்சேரி | 101-00 |
| சாமிதுரை தெமமூா | 10-00 |
| சண்முகம் சேப்ளாநத்தம் | 10-00 |
| ப. வைத்யநாதசாமி சேத்தியாதோப்பு | 20-00 |
| டி.ஆர். சுந்தரம் திட்டக்குடி தி.க. | 5-00 |
| கே. ராமசசந்திரன் | |
| மத்திய கிளை அமைப்பாளர் நெய்வேலி | 10-00 |
| இ. மோகன் திருமுட்டம் | 2-00 |
| மூர்த்தி எம்.ஜி.ஆர். மன்றம் | 2-00 |
| பழனிவேல் புவனகிரி | 2-00 |
| சீத்தாராமன் புடையூர் | 10-00 |
| இராதாகிருஷ்ணன் புவனகிரி | 101-00 |
| ராஜவேலு புவனகிரி தொகுதி சார்பில் | 103-55 |
| சாரதா | 5-00 |
| ஏ. மங்கவரம் | 5-00 |
| சியாமளா | 5-00 |
| லட்சுமிபதி பண்ருட்டி | 25-00 |

### திண்டிவனத்தில் தேர்தல் நிதி:

| | |
|---|---|
| தொகுதி அமைப்பாளர் திண்டிவனம் | 10-00 |
| வெங்கடேசன் | 5-00 |
| இராஜஸ்தானி சங்கம் | 1,001-00 |

### சிதம்பரத்தில் தேர்தல் நிதி

| | |
|---|---|
| ஆர். வைத்தியநாதன் விருத்தாசலம் | 1,001,00 |
| விவசாயக்கல்லூரி மாணவாகள் | |
| அண்ணாமலை பல்கலைக்கழகம் | 51. 00 |
| குழந்தைகளுக்கு பெயர் வைத்தது சம்பந்தமாக | 15.00 |
| திருவேட்களம் அ. இ. அ. தி. மு. க. | |
| தொண்டர்கள் சார்பாக | 5. 00 |
| மற்ற தோழாகள் சார்பாக | 266.00 |
| சீனிவாசன் 125வது வட்ட அமைப்பாளர் | 11-00 |
| சென்னை ஆச்சாரப்பன் தெருவில் நடைபெற்ற கழகப் பொதுக் கூட்டத்தில் அளித்த தேர்தல்நிதி | 5 00 |
| கபாடி ச பழனியப்பன் வேலூர் சேலம்-2 | 10-00 |
| ஏ. சி. தேவர் வழக்கறிஞர் சென்னை | 10-00 |
| சுப. துரைராசன் தலைமைக்கழகம் | 10-00 |
| மு. சக்தி 110-வது வட்டம் | 10-00 |
| க. சாமிநாதன் தலைமைக்கழகம் | 10-00 |
| எஸ். பார்த்தசாரதி அண்ணா நாளிதழ் | 10-00 |
| சு. தண்டபாணி தலைமைக்கழகம் | 10-00 |
| எம். சுப்ரமணியம் தலைமைக்கழகம் | 10-00 |
| எம். இளங்கோவன் தலைமைக்கழகம் | 10-[illegible] |
| எம். கிருஷ்ணகுமார் தலைமைக்கழகம் | 10[illegible] |
| ஜி. எம். சுந்தரம் அண்ணா நாளிதழ் | [illegible]00 |
| எஸ். திருவேங்கடம் தலைமைக் கழகம் | [illegible]0-00 |
| ஜெ. ராமசந்திரன் அண்ணா நாளிதழ் | 10-00 |
| கே. எஸ். பாபு அண்ணா நாளிதழ் | 10-00 |
| எம். ஏழுமலை 125-வது வட்டம் | |
| கோ. லட்சுமி நாராயணன் (பண்ருட்டி விவசாயப் பிரிவு செயலாளர்) | 11-00 |
| | 11-00 |
| வி. தமிழ்மணி வழக்கறிஞர் செட் | 10-00 |
| எஸ். பாலசுந்தரம் சென்னை-4 | |

எஸ். ராமசந்திரன்
பொருளாளர்
பொருந்திய அண்ணா தி. மு. க.

டால்மியா மாக்னசைட் போராட்டம்:

## தி. மு. க. துரோகம் முறியடிப்பு: உமாநாத் கண்டன அறிக்கை

**சேலம், மார்ச் 29- சேலம் டால்மியா மாக்னசைட் தொழிலாளர்களுக்கு துரோகம் செய்யும் வகையில் தி.மு.க. சங்கத்தின் தலைமை நடந்து கொண்டதை முறியடித்து போராட்டம் நடந்து வருகிறது. தொழிலாளர்களுக்கு ஆதரவாக அணிதிரள்வீர் என உமாநாத் அறிக்கை வெளியிட்டுள்ளார்.**

இந்திய தொழிற்சங்க மையம், தமிழ்மாநிலக் குழு பொதுச் செயலாளர் உமாநாத் தெரிவித்திருப்பதாவது:

சேலம்டால்மியா மாக்னசைட் தொழிலாளர்கள் 3 ஆயிரம் பேர் 11ம் தேதி முதல் வேலை நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். கடந்த பத்து ஆண்டுகாலமாக நடைபெற்று வந்த வார விடுமுறை நாட்களுக்கான ஊதியம் பற்றிய வழக்கில் தொழிலாளர்களுக்கு சாதகமாக தீர்ப்பை அமல் படுத்துவதற்கு பதிலாக மேலும் மேலும் நீதிமன்றங்களுக்கு சென்று காலங் கடத்தும் முயற்சியிலேயே நிர்வாகம் ஈடுபட்டுள்ளது.

### தி.மு.க. துரோகம்

மேலும் தொழிற்சங்க நடவடிக்கைகளையே நசுக்கும் முறையில் 30-க்கும் மேற்பட்ட தொழிலாளர்களை வேலைநீக்கம் செய்துள்ளனர். தொழிற்சாலையை ஒட்டிய பகுதிகளில்கூட தொழிற் சங்க நடவடிக்கைகளை நிர்வாகம் அனுமதிப்பதில்லை. இந்த நிலையில் 11ம்தேதி முதல் சி.ஐ.டி.யு., ஏ.ஐ.டி.யு.சி தொழிலாளாகள் ஒன்றுபட்டு வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர். ஐ.என்.டி.யு.சி.-தி.மு.க. சங்கத் தலைமைகளின் துரோகத்தனத்தை முறியடித்து போராட்டம் உறுதியாக நடைபெற்று வருகிறது.

இதற்கிடையே இந்த தனியார் நிறுவனத்திற்கு உதவக்கூடிய முறையில் மத்திய அரசுக்கு சொந்தமான பான் அண்ட் கம்பெனியும், தமிழக அரசுக்கு சொந்தமான தமிழ்நாடு மாக்னசைட் நிறுவனமும் மூலப் பொருட்களை வழங்க முற்பட்டுள்ளன. இதைக் கண்டித்து இந்த இரு ஆலைகளிலுமுள்ள தொழிலாளர்கள் 31-ம் தேதி அன்று கண்டன வேலைநிறுத்தம் செய்வதென முடிவு செய்துள்ளனர். இந்த தொழிலாளர்களுக்கு சி.ஐ.டி.யு.வின் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழக அரசுஉடனடியாக தலையிட்டு இந்த போராட்டத்திற்கு தீர்வு காண வேண்டுகிறேன், உறுதியுடன் போராடி வரும் டால்மியா தொழிலாளர்களுக்கு ஆதரவாக நடவடிக்கைகளில்ஈடுபடுமாறு அனைத்து தொழிற்சங்கங்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு ஆர். உமாநாத் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

குடிதண்ணீர் கோரி

## பஸ்ஸை முற்றுகை இட்ட பெண்கள்

கோவை, மார்ச் 29- கோவை ஆவாரம்பாளையம் பகுதியைச் சேர்ந்த பெண்கள் குடிதண்ணீர் கோரி சேரன் போக்குவரத்து கழகத்தை சேர்ந்த இரண்டு பஸ் 3 மணி நேரம் முற்றுகை யிட்டனா.

சமீபகாலமாக பம்பில் மோட்டார் ...னதால் செட் ரிப்பேர் பாதிக்கப் தண்ணீர் ... தெரிவிக்கப் பட்டது ... நகராட்சி அதி... பின் உறுதி மொழி கா... பேரில் பெண்கள் ...து சென்றனர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. First Main Road, United India Colony, Madras-24. Editor M. G. Chakkrapani

# அண்ணா



## ரூ. 3 லட்சம் மதிப்புள்ள சிலைகள் பறிமுதல்

சென்னை, மார்ச் 29- சென்னையில் சந்தேகத்திற்கிடமாக எல்.ஐ.சி. அருகில் நின்றிருந்தசுப்பையா (வயது 24) என்பவரை குற்றப் பிரிவு உதவி கமிஷனர் ராஜன் உத்தரவின் பேரில் போலீசார் கைது செய்தனர்.

சுப்பையா தலையில்வைத்திருந்த பெட்டியில் 200 வருடங்களுக்கு முந்திய இரண்டு பஞ்சலோக சிலைகள் இருந்தன. சிலையின் உயரம் 54. செ.மீ. இதன் மதிப்பு ரூ. 13 லட்சமாகும்.

இந்த சிலை எந்த இடத்திலிருந்து திருடப்பட்டது என்பதை போலீசார் விசாரித்து வருகின்றனர்.



### நெய்வேலியில் 15 ஆயிரம் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் ஏன்?

## கழகம் உள்ளிட்ட 6 தொழிற்சங்கங்கள் கூட்டறிக்கை

நெய்வேலி, மார்ச் 29- ஏப்ரல் 2-ந் தேதிக்குப் பிறகு நெய்வேலியில் வேலைநிறுத்தம் செய்யப் போவதாக நோட்டீஸ் கொடுக்கப்பட்டுள்ளது ஏன் என்பதை விளக்கி கழக தொழிற்சங்கம் உள்ளிட்ட 6 சங்கங்கள் அறிக்கை வெளியிட்டுள்ளன.

நிர்வாகத்தின் ஒத்துவராத போக்கே இந்த வேலைநிறுத்தத்திற்கு காரணம். நிர்வாகமே இதற்கு பொறுப்புஎன்றும் இந்த 6சங்கங்களும் தெரிவித்துள்ளன.

6 தொழிற்சங்கங்கள் சார்பில் வெளியிடப்பட்டுள்ள கூட்டறிக்கையில் அண்ணா தொழிலாளர் ஊழியர் சங்கத்தின் சார்பில் பொதுச் செயலாளர் சி. ஆர். வாசுதேவன் கையெழுத்திட்டுள்ளார்.

சி.ஐ.டி.யு. ஏ ஐ டி யு சி நெய்வேலி சுரங்கப்பணியாளர் சங்கம், தேசிய தொழிற்சங்கம், தொழிலாளர் முன்னேற்ற சங்கம் இந்த அறிக்கையில் கையெழுத்திட்டுள்ளன.

கூட்டறிக்கை விவரம் வருமாறு:-

நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனத்தில் பணிபுரியும் 15 ஆயிரம் தொழிலாளர்களுக்கு 18-10-76ல் ஓர் ஊதிய ஒப்பந்தம் கையெழுத்தாகியது.

இந்த ஒப்பந்த விகிதங்களின்படி வேறு பொதுத்துறை நிறுவனங்களில் கூடுதல் உயர்வு கொடுக்க அரசு ஒப்புக்கொண்டால், நெய்வேலி நிறுவனமும் அதை அமல்படுத்தவேண்டும் என்பதாகும்.

இந்த ஒப்பந்தத்திற்கு பிறகு பெல் நிறுவனத்தில் குறைந்தபட்ச ஊதியம் ரூ. 327 கொடுக்கப்பட்டுள்ளது.

மேலும் குறைந்தபட்ச உயர்வு ஊதிய நிர்ணயம் ஆகியவற்றில் பெருத்த வேறுபாடுகள் உள்ளன.

ஒப்பந்த விதியை அமல்படுத்துமாறு தொழிற்சங்கங்கள் நிர்வாகத்தைக் கோரின.

### முறிவு

நிர்வாகத்திடம் இருந்து திருப்திகரமான பதில் கிடைக்கவில்லை. தொழிலாளர் ஆணையர் முன்னிலையில் நடந்தநான்கு பேச்சுவார்த்தைகளிலும் முன்னேற்றம் ஏற்படவில்லை.

இந்த நிலையில் 2 ஆண்டுகளுக்கு உரிய நிலுவையை முன் பணமாகத்தர தொழிற்சங்கங்கள்வைத்த கோரிக்கையையும் நிர்வாகம் நிராகரித்துவிட்டது. ஆகவே கடந்த 18ம் தேதி வேலை நிறுத்த வாக்கெடுப்பு நடைபெற்றது. 12771 பேர்களில் 12073 பேர் வேலை நிறுத்தத்திற்கு ஆதரவாக வாக்களித்தனர்.

இதன் பிறகு கடந்த 19-ம் தேதி வேலை நிறுத்த நோட்டீஸ் தரப்பட்டது.

சுமுகமான தீர்வு கிடைக்காவிட்டால் ஏப்ரல் 2-ம் தேதிக்குப்பின் எந்த நேரமும் வேலை நிறுத்தம் நடைபெறும்.

அப்படி ஒரு வேலைநிறுத்தம் நடைபெற்றால் அதற்கு நிர்வாகம் பொறுப்பு ஆகும்.

இப்பிரச்னையை உடனே முடிக்க வேண்டியது நெய்வேலி நிர்வாகம் மற்றும் மத்திய அரசின் பொறுப்பு ஆகும் என்று தொழிற்சங்கங்கள் கருதுகின்றன.

## ஐஸ்ஹவுசில் ரூ. 24 ஆயிரம் அபேஸ்

சென்னை, மார்ச் 29- சென்னை பவழக்கார தெருவைச் சேர்ந்த வெங்கடசுப்பிரமணியம் (வயது 25). இவர் ஐஸ்ஹவுசில் ஸ்டாம்பு வெண்டராக இருப்பவர்.

சம்பவத்தன்று 21 ஆயிரம் ரூபாயும் 3 ஆயிரம் மதிப்புள்ள எழுதப்படாத பத்திரங்களும் வைத்துக்கொண்டு ஐஸ்ஹவுசில் உட்கார்ந்திருந்தார்.

யாரோ சில ஆசாமிகள் அவரிடம் பேச்சுக் கொடுத்து ஏமாற்றி ரூபாயையும் ஸ்டாம்பு பத்திரங்களையும் தூக்கிச் சென்றுவிட்டார்களாம்.

இதுகுறித்து போலீசார் வழக்குப் பதிவு செய்து புலன் விசாரணை நடத்தி வருகின்றனர்.

### ராயப்பா அறிக்கை

# பிற்படுத்தப்பட்டவர் நலன் பெற புரட்சித் தலைவரே முதல்வராக வேண்டும்

சென்னை, மார்ச் 29-தமிழ் நாட்டின் வருங்காலம் நல்லபடியாக இருக்கவும், பிற்படுத்தப்பட்டோர் வாழ்வில் முன்னேற்றம் ஏற்படவும் புரட்சித் தலைவர் முதல்வராக வருவதை ஆதரிப்பதைத் தவிர வேறுவழியில்லை என்று இ. பி. ராயப்பா கூறியிருக்கிறார்.

இது பற்றி முன்னாள் தலைமைச் செயலாளரும், அகில இந்திய பிற்படுத்தப்பட்ட மக்கள் இயக்கத் தலைவருமான ராயப்பா விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது;

சமீபத்தில் நடக்கவிருக்கும் தமிழ் நாட்டு சட்டசபை தேர்தலின் முக்கிய பிரச்சினை என்னவென்றால் யார் தமிழ் நாட்டு முதல்வராக வந்தால் தமிழ் நாட்டின் வருங்காலம் ஒளிமயமாய் இருக்கும். பிற்படுத்தப்பட்ட மக்கள் விரைவில் முன்னேற முடியும் என்ற பிரச்சினைதான்.

### தயக்கம் ஏன்?

கடந்த பாராளுமன்றத் தேர்தலின்போது இந்திரா அம்மையார் ஒருவர்தான் பிரதம மந்திரியாக வர தகுதி உள்ளவர் என்று கூறி காங்கிரஸ் கட்சி கூட்டணி ஓட்டு கேட்டார்கள். ஆனால் இப்பொழுது யார் தமிழ்நாட்டு முதலமைச்சராக வரத்தகுதியுள்ளவர் என்று கூறத் தயங்குகின்றனர். அதைப்பற்றி கட்சி உறுப்பினர் பேசக்கூடாது என்று மேலிடம் கட்டளையும் விடுத்துள்ளது. இதற்கு காரணம் என்ன?

யார் முதலமைச்சர் என்று மேலிடம் நிச்சயப்படுத்தியுள்ளார்களோ, அவர் பெயரைச் சொன்னால் மக்கள் காங்கிரஸ் கூட்டணிக்கு பெரும்பான்மையான ஓட்டுகளைப் போடமாட்டார்கள்என்று கருதி அதை வெளியே சொல்லாமல் மக்களிடமிருந்து மறைக்கிறார்கள் என்று தெள்ளத் தெளிவாகத்தெரிகிறது. இது மக்களை ஏமாற்றும்வித்தை அல்லவா?

தாழ்த்தப்பட்ட சமுதாயத்தின் தலைவர், இளைய பெருமாள் காற்றில் பறக்க விடப்பட்டார் ராமசுவாமி படையாச்சி குப்பையில் போடப்பட்டார். மக்களின் நம்பிக்கைக்குரியவரும் பிற்படுத்தப்பட்ட மக்களால் முதல்வர் பதவிக்கேற்ற ஒரே தலைவர் என்று கருதப்படும் மூப்பனாரும் ஒதுக்கப்பட்டுள்ளார். டாக்டர் கலைஞரைப்பற்றி மூச்சுக்கூட விடவில்லை.

### தகுதியுள்ள ஒரே ஒருவர்

இந்த சூழ்நிலையில் காங்கிரஸ் கூட்டணி ஆட்சி பொறுப்பில் வந்தால் மேல் ஜாதியைச் சேர்ந்தவர்கள் ஒருவரைத்திணிக்க சதி திட்டம் தீட்டப்பட்டுள்ளதோ என்ற ஒரு ஐயப்பாடு நிலவுகிறது.

தமிழ்நாட்டின் நலனைக் கருதி காங்கிரஸ் கூட்டணி தாங்கள் ஆட்சிப் பொறுப்பில் வந்தால் யார் முதலமைச்சராக வருவார் என்பதை தெளிவுபடுத்துவது அத்யாவசியம். இல்லைஎன்றால் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு அரசாங்கத்தின் வேலைகளிலும்கல்லூரிகளின் இட ஒதுக்கீட்டிலும்31 சதவீதத்திலிருந்து 50 சதவீதமாக ஒதுக்கீடு செய்த எம். ஜி. ஆரை ஆதரிப்பதைத் தவிர்த்து வேறுவழியில்லை.

இவ்வாறு ராயப்பா தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

## அன்புமணி குடும்பத்துக்கு ரூ.1000: கழகம் வழங்கியது

சென்னை, மார்ச் 29 மயிலை அனைத்திந்திய அண்ணா தி. மு. க. சார்பில் ஜனதாகட்சித்தலைவர் ரமணிபாயிடம் சென்னை மாவட்ட ஜனதாகட்சி தலைவராக இருந்த காலஞ்சென்ற இலா. இ. அன்புமணி குடும்ப நிதியாக ரூ. 1000 மயிலைதொகுதி முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் டி. கே. கபாலி, மயிலை பகுதி அமைப்பாளர் தமிழ்மணி முன்னிலையில் வழங்கினார்.

## சங்ககிரி மன்ற உறுப்பினர் கூட்டம்

சங்ககிரி, மார்ச் 29- நகரில் உள்ள அனைத்து மன்ற உறுப்பினர்கள் கூட்டம் சங்ககிரியில் பயணியர் விடுதியில் ஞாயிறு (30-3-80) இரவு 8 மணிக்கு நடைபெறும்.

அனைத்து உறுப்பினர்களும் கலந்து கொள்ளும்படி சங்ககிரி மக்கள் திலகம் எம். ஜி. ஆர். மன்றப் பொருளாளர் குடந்தை நடராசன் அழைப்பு விடுத்துள்ளார்.